ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**கணக்காய்வு பரீட்சகர் சேவையின் கணக்காய்வு பரீட்சகர் தரம் II இற்கு ஆட்சேர்ப்பதற்கான திறந்த போட்டிப் பரீட்சை - 2016**

Open Competitive Examination for Recruitment of Audit Examiners to Grade II of the Audit Examiners' Service - 2016

**(01) கணக்கியல்**
Accounting

**மூன்று மணித்தியாலங்கள்**
Three hours

**எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

1. (அ) நீர் வடிப்பான்களை உற்பத்தி செய்யும் வரையறுத்த வோட்டர் வேக்ஸ் கம்பனியின் 2016 ஆம் ஆண்டு மார்ச் 31 திகதியில் முடிவடைந்த வருடத்துக்காக புத்தகங்களிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட தகவல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூபா |
|---|---|
| மூலப்பொருட்களின் கொள்வனவு | 1 464 000 |
| நேர்க்கூலிகள் | 220 000 |
| உட்சுமை கூலிச்செலவுகள் | 10 000 |
| தொழிற்சாலை வாடகை | 88 000 |
| விற்பனை | 2 520 000 |
| தொழிற்சாலை மின்சாரம் | 124 000 |
| தொழிற்சாலை மேற்பார்வை | 180 000 |
| நேரில் மூலப்பொருள் | 52 000 |
| பொறித் தேய்மானம் | 48 000 |
| 2015.04.01 உள்ள தொக்கு மீதி | |
| - மூலப்பொருள் | 240 000 |
| - முடிவடைந்த பொருள் (60 அலகுகள்) | 552 000 |
| - புத்துருவாகும் வேலை | 70 000 |

உமக்கு பின்வரும் மேலதிக தகவல்கள் தரப்படுகின்றன.

(i) 2016.03.31 இலுள்ள தொக்கு மீதிகள்
- மூலப்பொருள் - ரூபா 180 000
- புத்துருவாகும் வேலை - ரூபா 92 000

(ii) வருடத்தின்போது இரண்டு தண்ணீர் வடிப்பான்கள் வைத்தியசாலைக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டதுடன், ரூபா 24 000 மதிப்புள்ள மூலப்பொருள்கள் தீயினால் அழிந்தன. இவை சம்பந்தமாக புத்தகங்களில் பதிவுகள் மேற்கொள்ளப்படவில்லை.

(iii) 2016.03.31 இல் தொழிற்சாலையில் 78 தண்ணீர் வடிப்பான்கள் இருந்தன.

(iv) வருடத்தின் போது 180 தண்ணீர் வடிப்பான்கள் விற்பனை செய்யப்பட்டது. அது வருட ஆரம்ப தொக்கு 60 தண்ணீர் வடிப்பான்களையும் உள்ளடக்கியது.

**தேவைப்படுவது :**

2016.03.31 இல் முடிவடைந்த வருடத்துக்கான உற்பத்தி வியாபாரக் கணக்கை கீழ்வரும் தகவல்களை சரியாக காட்டித் தயாரிக்குக.
- பாவித்த மூலப்பொருள் கிரயம்
- மூலக் கிரயம்
- மொத்த உற்பத்தி கிரயம்
- இறுதித் தொக்கு மதிப்பு - முடிவடைந்த பொருள் மொத்த உற்பத்தி கிரயத்தின் அடிப்படையில்
- விற்ற பொருளின் கிரயம்

(ஆ) ஒரு வியாபார நிறுவனத்தின் தொக்குகளை மதிப்பீடு செய்யும்போது பயன்படுத்தக்கூடிய **இரு** கிரய முறைகளை பெயரிடுக.

*(40 புள்ளிகள்)*

[பக் 2 ஐப் பார்க்க.

**2.** வரையறுக்கப்பட்ட அரலிய கம்பனியின் 2016.03.31 ஆந் திகதியிலான தயாரிக்கப்பட்ட பரீட்சைமீதி பின்வருமாறு தரப்படுகிறது.

| | ரூபா '000 | |
|---|---|---|
| | பற்று (Dr) | வரவு (Cr) |
| பங்கு மூலதனம் | | 2 350 |
| வாகனக் கடன் | | 600 |
| விற்பனை | | 10 000 |
| 2015.04.01 இல் தொக்கு | 400 | |
| கொள்வனவு | 6 500 | |
| உட்சுமைகூலி | 400 | |
| சம்பளம் தொழிலாளர் | 800 | |
| பணிப்பாளர் வேதனம் | 500 | |
| கணக்காய்வுக் கட்டணம் | 100 | |
| அறவிடமுடியாக்கடன் | 50 | |
| 2015.04.01 இல் ஐயக்கடன் ஒதுக்கம் | | 30 |
| வங்கிக்கட்டணம் | 20 | |
| தொகுதிக்கடன் வட்டி 2015.12.31 வரை செலுத்தியது | 90 | |
| விற்பனை தரகு | 200 | |
| விநியோக செலவு | 150 | |
| பெறப்பட்ட குத்தகை வருமானம் | | 210 |
| நிர்வாக செலவு | 230 | |
| 12% தொகுதிக் கடன் | | 1 000 |
| பெறப்பட்ட கழிவு | | 100 |
| 2015.04.01 வருமான வரி ஒதுக்கம் | | 200 |
| செலுத்திய வருமான வரி | 550 | |
| வருமதியாளர்கள் | 230 | |
| சென்மதியாளர்கள் | | 100 |
| கட்டிடம் - கிரயத்தில் | 2 500 | |
| விநியோக வேன் - கிரயத்தில் | 1 800 | |
| காரியாலய உபகரணம் - கிரயத்தில் | 1 000 | |
| 2015.04.01 இல் திரண்ட தேய்மானங்கள் | | |
| - விநியோக வேன் | | 630 |
| - காரியாலய உபகரணம் | | 300 |
| | **15 520** | **15 520** |

பின்வரும் தகவல்கள் உமக்குத் தரப்படுகின்றன.

(i) தொக்கின் 2016.03.31 ஆந் திகதியிலான கிரயம் ரூபா 300 000, தேறிய கைக்கு கிட்டிய பெறுமதி ரூபா 350 000 (Net Realization Value)

(ii) கம்பனிக்கு சொந்தமான காணி 2014 ஆம் வருடம் தொடக்கம் ரூபா 10 000 மாதமொன்றுக்கு குத்தகைக்கு வழங்கப்பட்டது. ஜனவரி 2016 ஆம் ஆண்டு முதல் இந்த குத்தகை ரூபா 20 000 ஆக மாதமொன்றுக்கு உயர்த்தப்பட்டது.

(iii) அறவிடமுடியாகடனாக மேலும் 30 000 பதிவழிக்க தீர்மானிக்கப்பட்டது. அதே நேரம் ஐயக்கடன் ஒதுக்கத்தை மீதி வருமதியாளர் தொகையில் 10% ஆக சீராக்கம் செய்யவேண்டும்.

(iv) ரூபா 500 000 பெறுமதியான புதிய காரியாலய உபகரணம் 2016 ஆம் ஆண்டு ஜனவரி 01 ஆம் திகதியிலிருந்து காரியாலய பாவனைக்காக கொண்டுவரப்பட்டது. எப்படியாயினும் இது கொள்வனவாக அறிக்கையிடப்பட்டுள்ளது. காரியாலய உபகரணம் 20% ஒடுங்குபாக முறையில் தேய்மானம் இடப்படுகிறது.

[பக் 3 ஐப் பார்க்க.

(v) 2015.10. 01 ஆந் திகதியில் ரூபா 800 000 பெறுமதியான புதிய வாகனம் வாங்கப்பட்டது. இந்த வாகனம் வாங்கப்பட்ட போது ரூபா 500 000 கிரயத்துக்கு 2013. 10. 01 இல் வாங்கப்பட்ட வாகனம் ரூபா 200 000 மதிப்பில் மாற்றீடு செய்யப்பட்டது. 600 000 ரூபாய் வங்கிகடன் 14% வருடாந்த வட்டிக்கு பெறப்பட்டு மீதி தீர்க்கப்பட்டது. பெறப்பட்ட கடன் ரூபா 600 000 புதிய வாகனத்தின் கிரயமென விநியோக வாகனக் கணக்கில் வரவு வைக்கப்பட்டதுடன் வங்கிகடன் கணக்கில் செலவு வைக்கப்பட்டது. இதைத் தவிர வேறு எந்த பதிவும் இது சம்பந்தமாக வைக்கப்படவில்லை. 20% கிரயத்தில் விநியோக வாகனங்களுக்கு தேய்மானம் வருடத்திற்கு கழிக்கப்படும்.

(vi) வருடத்தின்போது செலுத்தப்பட்ட வருமானவரி ரூபா 150 000 வரி மதிப்பீட்டு ஆண்டு 2014/2015 இற்கு உரியது. 2015/2016 இல் மதிப்பீடு செய்யப்பட்ட வருமானவரி ரூபா 750 000 ஆகும்.

(vii) 2016. 03. 31 ஆந் திகதி முற்கொடுப்பனவுகளும், அட்டுறு செலவுகளும் வருமாறு

| | முற்கொடுப்பனவு | அட்டுறு செலவு |
|---|---|---|
| | ரூபா | ரூபா |
| விநியோக செலவு | 50 000 | - |
| நிர்வாக செலவு | 75 000 | 45 000 |

**தேவைப்படுவது:**

(1) 2016.03.31 இல் முடிவடைந்த ஆண்டுக்கான நிரல் வடிவிலான முறையில் பிரசுரத்துக்கு ஏற்றவாறு வருமானக்கூற்று

(2) கம்பனியின் நிதிநிலைமையைக் காட்டும் 2016.03.31 ஆந் திகதியிலான ஐந்தொகை

**குறிப்பு:** நடைமுறை அல்லாத சொத்துக்கள் மற்றும் திரண்ட தேய்மானம் சம்பந்தமாக வேறு வேறாக மாறுதல்கள் காட்டப்படுவதுடன் செலவின பாகுபடுத்தலும் வேறு வேறாக காட்டப்படுதல் அவசியமாகும்.

*(60 புள்ளிகள்)*

**3.** ரோகண தனது வியாபாரத்துக்கு தகுந்த கணக்கு புத்தகங்களை வைத்திருக்கவில்லை. ஆனால் 2016. 03. 31 இல் காசுக் கணக்கெடுப்பின்போது ரூபா 50 000 காசு மீதி இருந்தது. எனினும் உரிமையாளர் இதிலும் கூடிய காசுமீதி இருக்கவேண்டுமெனவும், காசாளன் ஒருதொகை காசை எடுத்திருக்கலாம் எனவும் சந்தேகப்பட்டார்.

உமக்கு பின்வரும் தகவல்கள் தரப்படுகின்றன.

(i) வருடத்தினுள் வங்கி கொடுக்கல் வாங்கல்களின் பொழிப்பு வருமாறு :-

| | ரூபா | ரூபா |
|---|---|---|
| 2015.04.01 இல் வங்கிக்கூற்றுபடி வங்கிமீதி | 12 000 | |
| கூட்டுக. : வைப்புக்கள் | 650 000 | |
| | | 662 000 |
| கழிக்குக. : கொடுப்பனவு | | |
| வியாபார சென்மதியாளர் | 330 000 | |
| சம்பளம் | 120 000 | |
| தொழிற்பாட்டு செலவினம் | 280 000 | (730 000) |
| 2016.03.31 இல் வங்கிக்கூற்றின்படி வங்கிமேலதிகப்பற்று | | (68 000) |

(ii) வியாபார சென்மதியாளர், வருமதியாளர்கள் மீதி வருமாறு;

| | 2015.04.01 | 2016.03.31 |
|---|---|---|
| | ரூபா | ரூபா |
| வியாபார வருமதியாளர்கள் | 250 000 | 100 000 |
| வியாபார சென்மதியாளர்கள் | 120 000 | 200 000 |

(iii) மொத்த விற்பனை ரூபாய் 850 000 என்பதுடன், இதில் காசுவிற்பனை ரூபா 250 000. வருடத்தின் போது பெறப்பட்ட கழிவு, கொடுத்த கழிவு முறையே ரூபா 5 000 ம், ரூபா 8 000 ம் ஆகும்.

(iv) ரூபா 2 000 அறவிடமுடியாக்கடனாக பதிவழிக்கப்பட்டதுடன், வெளித்திரும்பல், உட்திரும்பல்கள் முறையே ரூபா 4 000, ரூபா 6 000 ஆகும்.

[பக் 4 ஐப் பார்க்க.

(v) 2015.04.01 இல் ரோகண ரூபா 40 000 ஐ வைப்புச் செய்யும்படி கோரப்பட்டிருந்தார். வருடத்தின்போது பெறப்பட்ட காசு தொழிற்பாட்டுச் செலவுக்கும் பெறப்பட்ட காசிலிருந்து எடுப்பனவு செய்யப்பட்டதும் தவிர ஏனைய எஞ்சிய பணம் வங்கியில் வைப்பு செய்யப்பட்டது.

(vi) வருடத்தின் போது காசாக செய்த மேற்பார்வை செலவு ரூபா 140 000 ஆவதுடன் ரூபா 15 000 எடுப்பனவு காசாக எடுக்கப்பட்டது.

**தேவையானது** :

(1) வருமதியாளர் கட்டுப்பாட்டுக் கணக்கு, சென்மதியாளர் கட்டுபாட்டுக் கணக்குகளை தயாரிக்குக.

(2) 2016.03.31 இல் காசு மீதி எவ்வளவாக இருக்கவேண்டுமென்பதை காட்டும் கூற்றைத் தயாரிப்பதுடன் காசாளர் கையாடிய காசுத்தொகையையும் துணிக.

*(20 புள்ளிகள்)*

**4.** ரிக்கோ கம்பனி மூலப்பொருள் வழங்கலின் போது முதல் வந்து முதல் போகும் முறையை (FIFO) விலையிடலில் பாவிக்கிறது. பின்வரும் கொடுக்கல் வாங்கல்கள் முதலாம் காலாண்டில் மூலப்பொருள் "X" தொடர்பாக இடம்பெற்றது.

| | | |
|---|---|---|
| ஜனவரி 30 | - | 100 அலகுகள் கொள்வனவு ரூபா 10 ஒவ்வொன்றும் |
| பெப்ரவரி 12 | - | 50 அலகுகள் கொள்வனவு ரூபா 12 ஒவ்வொன்றும் |
| பெப்ரவரி 18 | - | 110 அலகுகள் வழங்கல் |
| மார்ச் 06 | - | 50 அலகுகள் கொள்வனவு ரூபா 13 ஒவ்வொன்றும் |
| மார்ச் 20 | - | 80 அலகுகள் வழங்கல் |

**தேவையானது** :

(1) 31 மார்ச்சுக்கான, தொக்கு பேரேட்டை நிரல் வடிவில் தயாரித்து மீதித் தொக்கின் மதிப்பை தெளிவாக காட்டுக.

(2) முதல் வந்து முதல் போகும் (FIFO) முறையில் நன்மை, தீமைகளை குறிப்பிடுக.

*(20 புள்ளிகள்)*

**5.** (i) “கணக்கீட்டு அடிப்படைகள்” என்ற பதத்தை சுருக்கமாக விபரிக்குக.

(ii) “பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டவை” கணக்கீட்டு அடிப்படைகளில் முக்கியத்துவம் வாய்ந்தது ஏன்?

(iii) இலங்கையில் கணக்கீட்டு அடிப்படைகளை மேம்படுத்த ஏற்படுத்தப்பட்ட **இரண்டு** முக்கிய மூலங்களை பெயரிடுக.

*(10 புள்ளிகள்)*

❊ ❊ ❊

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

## கணக்காய்வு பரீட்சகர் சேவையின் கணக்காய்வு பரீட்சகர் தரம் II இற்கு ஆட்சேர்ப்பதற்கான திறந்த போட்டிப் பரீட்சை - 2016

## Open Competitive Examination for Recruitment of Audit Examiners to Grade II of the Audit Examiners' Service - 2016

**(02) கிரயக் கணக்கியல்**
Cost Accouting

**இரண்டு மணித்தியாலங்கள்**
Two hours

**எல்லா** வினாக்களுக்கும் விடை தருக.

1. *ABC* கம்பனியின் புத்தகங்களிலிருந்து பிரித்தெடுக்கப்பட்ட கீழே காட்டப்படும் கூற்றிலிருந்து மாதாமாதம் காட்டும் காசுப் பாதீட்டை 2016 ஆம் ஆண்டு திசம்பர் மாதம் 31 ஆந் திகதி முடிவடையும் ஆறு மாதங்களுக்கு தயாரிக்குக.

(அ)

| | ரூபா (000) | ரூபா (000) |
|---|---|---|
| விற்பனை (காசு ஒரு மாத நிலுவையில் பெறப்படுகிறது) | | 2 400 |
| விற்றபொருள் கிரயம் : | | |
| ஒருமாத கால நிலுவையில் செலுத்தப்பட்டது | 1 800 | |
| கொள்வனவு மாதத்தில் செலுத்தப்பட்டது | 288 | |
| தேய்மானம் | 144 | 2 232 |
| பாதீட்டுப்படி இலாபம் | | 168 |

(ஆ) **மூலதனப் பாதீடு :**

| | ரூபா (000) | ரூபா (000) |
|---|---|---|
| புதிய பொறிக்கான கொடுப்பனவு : | | |
| யூலை | 24 | |
| ஆகஸ்ட் | 50 | |
| செப்ரெம்பர் | 26 | |
| நொவம்பர் | 100 | 200 |
| ஆகஸ்ட் மாதத்தில் அதிகரித்து தொக்கு, கொடுப்பனவு | | 40 |
| செய்யவேண்டியது | | 240 |
| பெறுவனவுகள் : | | |
| புதிய மூலதன வழங்கல் (ஒக்டோபர்) | | 60 |

(இ) **ஐந்தொகை :** 2016 யூலை 01 இல் உள்ளபடியான

| | ரூபா (000) | ரூபா (000) |
|---|---|---|
| சொத்துக்கள் : | | |
| நடைமுறை அல்லாத சொத்துக்கள் | 1 440 | |
| தொக்கு | 200 | |
| வருமதியாளர் | 420 | |
| காசு | 80 | 2 140 |
| பொறுப்புக்கள் : | | |
| மூலதனமும் ஒதுக்கங்களும் | 1 712 | |
| வரி (டிசெம்பர் செலுத்தவேண்டியது) | 60 | |
| வியாபார சென்மதியாளர் | 320 | |
| பங்கு இலாபம் (ஆகஸ்ட் செலுத்தவேண்டியது) | 48 | 2 140 |

*(25 புள்ளிகள்)*

[பக் 2 ஐப் பார்க்க.

**2.** ஒரு லீற்றருக்கான மரக்கறி எண்ணெயின் நியமக் கிரயம் கீழே காட்டப்பட்டுள்ளது.

| | ரூபா |
|---|---|
| நேர் மூலப்பொருள் (4 kg -1kg ரூபா 6 வீதம்) | 24 |
| நேர்க்கூலி (5 மணித்தியாலங்கள் - மணிக்கு ரூபா 8 வீதம்) | 40 |
| மாறும் மேந்தலை | 10 |
| நிலையான மேந்தலை | 30 |
| இலீற்றருக்கான நியமக் கிரயம் | 104 |

மரக்கறி எண்ணெயின் நியம விற்பனை விலை ரூபா 120 / இலீற்றர் பாதீடு செய்யப்பட்டு விற்பனை செய்யப்படும் கணியம் ஒவ்வொரு காலப் பகுதிக்கும் 10 000 இலீற்றர்களாகும். மாறும் மேந்தலைகள் நேரடியாக உற்பத்தி செய்யப்படும். இலீற்றரின் அளவுக்கு ஏற்ப மாறுபடும் என அனுமானிக்கப்படும்.

உண்மையான **காலம் 4 க்கான** பெறுபேறுகள் :

| | ரூபா (000) | ரூபா (000) |
|---|---|---|
| விற்பனை (9 500 லீற்றர்) | | 1 177 |
| விற்பனை கிரயம் : | | |
| நேர்மூலப்பொருள் (37 000 kg ) | 240 | |
| நேர்க்கூலி (49 000 மணித்தியாலங்கள்) | 400 | |
| மாறும் மேந்தலை | 94 | |
| நிலையான மேந்தலை | 290 | 1 024 |
| இலாபம் | | 153 |

காலப்பகுதியின் ஆரம்பத்திலோ, முடிவிலோ புத்துருவாகும் வேலை, தொக்குகள் மீதி இருக்கவில்லை

(அ) **காலம் 4 க்கான** பின்வரும் முரண்களைக் கணிக்குக.

(i) மூலப்பொருள் விலை முரண்

(ii) மூலப்பொருள் பாவனை முரண்

(iii) நேர்க்கூலி வீத முரண்

(iv) கூலி வினைத்திறன் முரண்

(v) மாறும் மேந்தலை செலவின முரண்

(vi) நிலையான மேந்தலை செலவின முரண்

(vii) நிலையான மேந்தலை கனவளவு முரண்

(viii) விற்பனை வட்டவிலை முரண் (Sales Margin Price Variance)

(ix) விற்பனை வட்ட கனவளவு முரண் (Sales Margin Volume Variance)

(ஆ) காலம் 4 க்கான பாதீட்டு இலாபம், உண்மை இலாபத்தை இணக்கம் செய்யும் கூற்றைத் தயாரித்து காட்டுக.

*(29 புள்ளிகள்)*

**3.** *XY* கம்பனி நீராவி இரும்பு அழுத்தும் பெட்டிகளை மூன்று உற்பத்தி கிளைக் களங்களிலும் [இயந்திரமாக்கல் (machining), கூட்டிணைத்தல், (assembling) மற்றும் முடிவுறுத்தல் (finishing)] மற்றும் இரண்டு சேவைகள் திணைக்களத்திலும் [மூலப்பொருள் கையாளல் (materials handling) மற்றும் உற்பத்திக் கட்டுப்பாடு (production control)] நீராவி அழுத்தும் பெட்டி (steam irons) உருவாக்குகின்றது.

இறுதி மாதத்தில் 2 000 அழுத்தும் பெட்டிகளின் கிரயம் கீழே தரப்படுகின்றது.

மூலப் பொருட்கள் :

| | |
|---|---|
| இயந்திரமாக்கல் | ரூபா 250 000 |
| கூட்டிணைத்தல் | ரூபா 140 000 |
| முடிவுறுத்தல் | ரூபா 50 000 |
| மூலப்பொருள் கையாளல் | ரூபா 4 000 |

கூலிகள் :

| | |
|---|---|
| இயந்திரமாக்கல் | - 10 000 மணி - மணிக்கு ரூபா 4 வீதம் |
| கூட்டிணைத்தல் | - 5 000 மணி - மணிக்கு ரூபா 3 வீதம் |
| முடிவுறுத்தல் | - 3 000 மணி - மணிக்கு ரூபா 3.50 வீதம் |
| மூலப்பொருள் கையாளல் | ரூபா 8 000 |
| உற்பத்தி கட்டுப்பாடு | ரூபா 11 200 |

ஏனைய கிரயம் :

| | |
|---|---|
| இயந்திரமாக்கல் | ரூபா 41 920 |
| கூட்டிணைத்தல் | ரூபா 12 960 |
| முடிவுறுத்தல் | ரூபா 7 920 |
| மூலப்பொருள் கையாளல் | ரூபா 8 000 |
| உற்பத்தி கட்டுப்பாடு | ரூபா 2 400 |

சேவைத் திணைக்களத்திலிருந்து பெறப்பட்ட நன்மைகள் வருமாறு மதிப்பீடு செய்யப்பட்டது.

உற்பத்திக் கட்டுப்பாடு :

| | |
|---|---|
| இயந்திரமாக்கல் | 40% |
| கூட்டிணைத்தல் | 30% |
| முடிவுறுத்தல் | 20% |
| மூலப்பொருள் கையாளல் | 10% |

மூலப்பொருள் கையாளல் :

| | |
|---|---|
| இயந்திரமாக்கல் | 60% |
| கூட்டிணைத்தல் | 30% |
| முடிவுறுத்தல் | 10% |

(அ) ஒவ்வொரு உற்பத்தி திணைக்களங்களுக்கு மேந்தலை ஒதுக்கப்படும் (overhead allocated) மற்றும் பகுத்தீடு (apportioned) செய்யும் கூற்றைத் தயாரிக்குக.

(ஆ) நீராவி அழுத்துப் பெட்டிக்கான அலகுக்கிரயத்தை கணிக்குக.

*(24 புள்ளிகள்)*

[பக் 4 ஐப் பார்க்க.

**4.** விவசாய உற்பத்தி கம்பனி விசேட உற்பத்தி பொருள் ‘A’ ஐ உற்பத்தி செய்கிறது. 2015 வருடத்துக்கான தகவல்கள் கீழே தரப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| சாதாரண பாவனை (normal usage) | : | 50 அலகுகள் வாரமொன்றுக்கு |
| ஆகக் குறைந்தளவு பாவனை | : | 25 அலகுகள் வாரமொன்றுக்கு |
| ஆகக் கூடிய பாவனை | : | 75 அலகுகள் வாரமொன்றுக்கு |
| கட்டளையிடும் கிரயம் (கட்டளை ஒன்றுக்கு) | : | ரூபா 200 |
| வருடாந்த அலகுக்கான களஞ்சிய வைத்திருத்தல் கிரயம் | : | ரூபா 26 |
| மீள்கட்டளை காலம் | : | கிழமைகள் 4 தொடக்கம் 6 வரை |

மேற்காட்டிய தகவல்களை பாவித்து பின்வருவனவற்றை கணிக்குக.

(அ) மீள்கட்டளை கணியம் (ROQ/EOQ)

(ஆ) மீள்கட்டளை மட்டம் (ROL)

(இ) ஆகக்குறைந்த தொக்கு மட்டம்

(ஈ) ஆகக்கூடிய தொக்கு மட்டம்

(உ) சராசரி (average) தொக்கு மட்டம்

*(12 புள்ளிகள்)*

**5.** 1000 அலகுகளுக்கான ஒரு உற்பத்தி பொருளின் விற்பனை விபரம் வருமாறு

| | | |
|---|---|---|
| விற்பனை | ரூபா | 10 000 |
| மாறும் கிரயம் | ரூபா | 6 000 |
| நிலையான கிரயம் | ரூபா | 2 500 |

கீழ்வருவனவற்றைக் கணிக்குக.

(அ) ஒதுக்குதல் / விற்பனை விகிதம் (C/S ratio)

(ஆ) சமப்பாட்டுப் புள்ளியில் விற்பனை அலகுகள், விற்பனை

(இ) பாதுகாப்பு பகுதி (margin of safety)

(ஈ) ரூபா 2 000 இலாப அதிகரிப்புக்கான விற்பனை கணியம் (அலகுகளில்)

*(10 புள்ளிகள்)*

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**கணக்காய்வு பரீட்சகர் சேவையின் கணக்காய்வு பரீட்சகர் தரம் II இற்கு ஆட்சேர்ப்பதற்கான திறந்த போட்டிப் பரீட்சை - 2016**

Open Competitive Examination for Recruitment of Audit Examiners to Grade II of the Audit Examiners' Service -2016

**(03) கணக்காய்வு**
Auditing

**மூன்று மணித்தியாலங்கள்**
Three hours

**எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

**1.** (i) உள்ளகக் கணக்காய்வுக்கும் புறக் கணக்காய்வுக்கும் உள்ள வேறுபாட்டை விளக்குக. *(15 புள்ளிகள்)*

(ii) உள்ளக, புறக் கணக்காய்வாளர்கள் இருவருக்கும் இடையே உள்ள பொதுவான பரப்புக்கள் (area) யாவை? *(10 புள்ளிகள்)*

**2.** (i) இலங்கை அரசியலமைப்பில் குறிப்பிடப்பட்டுள்ள கணக்காய்வாளர் நாயகத்தின் வகிபாகம் (role) என்ன? *(16 புள்ளிகள்)*

(ii) அரசியலமைப்பினால் கணக்காய்வாளர் நாயகத்துக்கு, அவரது கடமையின் பொருட்டு ஒப்படைக்கப்பட்டுள்ள உரிமைகள் யாவை? *(09 புள்ளிகள்)*

**3.** சுருக்கமாக விபரிக்குக.

(i) அகக்கட்டுபாடு மற்றும் அகச் செவ்வை (Internal Control and Internal Check)

(ii) உறுதிச்சீட்டு அணுகுமுறை மற்றும் முறைமை அணுகுமுறை (Vouching Approach and Systems Approach)

(iii) கட்டுபாட்டுச் சோதனை மற்றும் உறுதிப்பாட்டுச் சோதனை (Tests of Control and Substantive Tests)

(iv) நடைமுறை பொறுப்புக்கள் மற்றும் நிகழத்தக்க பொறுப்புக்கள் (Current Liabilities and Contingent Liabilities)

(v) நிரந்தர கணக்காய்வுக்கோவை மற்றும் நடைமுறை கணக்காய்வுக்கோவை (Permanent Audit File and Current Audit File)

*(05 × 05 = 25 புள்ளிகள்)*

**4.** "கணக்காய்வாளர் நிதிக்கூற்றுகளை கணக்காய்வு செய்வதினால் அக்கூற்றுக்களின்பால் தனது அபிப்பிராயத்தை இலங்கை கணக்காய்வு நியமங்களின் படி வெளியிடவேண்டும்."

(i) கணக்காய்வாளர் **முனைப்பழிவுஅற்ற** அபிப்பிரயாயத்தை வெளியிடக்கூடிய சந்தர்ப்பங்களை விபரிக்குக. *(05 புள்ளிகள்)*

(ii) **முனைப்பழிவுஅற்ற** அபிப்பிராயத்தை வெளியிட **முடியாத** சந்தர்ப்பங்களை குறிப்பிடுக. *(08 புள்ளிகள்)*

(iii) கணக்காய்வு அபிப்பிராயத்தில் "நோக்க எல்லையின் மட்டுப்பாடு" என்றால் என்ன என விபரிக்க. *(12 புள்ளிகள்)*

**5.** கணக்காய்வுக்கு வருடமுடிவில் சமர்ப்பிக்கப்பட்ட நிதிக்கூற்றுக்களில் பின்வரும் உருப்படிகளை நீர் எவ்வாறு உறுதிப்பாடு / உருப்படி சரிபார்த்தல் செய்வீர் என விபரிக்குக.

(i) இறுதித் தொக்கு

(ii) காணியும் கட்டிடமும்

(iii) வங்கி மேலதிகப்பற்று

(iv) புத்துருவாகும் வேலை

(v) நடைமுறை அல்லாத சொத்துக்களின் மீதான தேய்மான ஒதுக்கம்

*(05 × 05 = 25 புள்ளிகள்)*

**6.** சிறுகுறிப்பு எழுதுக.

(i) கணக்கீட்டு விகிதங்கள்

(ii) அகக்கட்டுப்பாட்டு வினாக்கொத்து

(iii) பொருண்மை

(iv) பிரதிநிதித்துவ கடிதம்

(v) ஐந்தொகை திகதிக்கு பின்னரான நிகழ்வுகள்

*(05 × 05 = 25 புள்ளிகள்)*

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் / Department of Examinations, Sri Lanka

**கணக்காய்வு பரீட்சகர் சேவையின் கணக்காய்வு பரீட்சகர் தரம் II இற்கு ஆட்சேர்ப்பதற்கான திறந்த போட்டிப் பரீட்சை - 2016**

Open Competitive Examination for Recruitment of Audit Examiners to Grade II of the Audit Examiner's Service - 2016

**(04) வணிகக் கணிதமும் புள்ளிவிபரவியலும்**
Business Mathemeatics and Statistics

**இரண்டு மணித்தியாலங்கள்**
Two hours

- பகுதி (அ) இன் **முதலாம்** வினாவிற்கும் பகுதி (ஆ) இல் **இரு** வினாக்களுக்கும் பகுதி (இ) இல் **இரு** வினாக்களுக்குமாக மொத்தம் **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
- பகுதி (அ) இன் முதலாம் வினாவின் ஒரு உபவினாவிற்காக 05 புள்ளிகள் வீதம் 40 புள்ளிகளும் பகுதி (ஆ) மற்றும் பகுதி (இ) இன் ஒவ்வொரு வினாவிற்கும் 15 புள்ளிகள் என்றவாறு 60 புள்ளிகளும் வழங்கப்படும்.
(மடக்கை அட்டவணைகள், புள்ளிவிபரவியல் அட்டவணை, மற்றும் வரைபுத்தாள்கள் என்பன வழங்கப்படும்.)

## பகுதி (அ)

**1.** உமது விடைத்தாளில் வினா இலக்கத்திற்கு எதிரே உரிய தெரிவினை (1), (2), (3) என்றவாறு குறிப்பிடுவதன் மூலம் சரியான விடையைக் குறிப்பிடுக.

(i) $(5-2x)(3+x)=0$ என்ற சமன்பாட்டின் மூலகங்களாவன,
 (1) $-\frac{5}{2}, -3$  (2) $\frac{5}{2}, 3$  (3) $\frac{5}{2}, -3$

(ii) $4y = 6x - 36$ என்ற சமன்பாடானது $x$ அச்சை வெட்டும் புள்ளியினது ஆள்கூறுகள் ஆவன
 (1) $(0, -9)$  (2) $(9, 0)$  (3) $(6, 0)$

(iii) $a = 6$, $b = -2$ உம் $c = 3$ உம் ஆகும்போது $(a-b)^{\frac{a}{c}}$ இன் பெறுமானமாக அமைவது
 (1) 64  (2) 16  (3) 8

(iv) 12 000 ரூபாய் பணத்தை வருடத்திற்கு $r\%$ எளிய வட்டியின் கீழ் முதலீடு செய்து 3 வருடங்களின் பின்னர் 17 400 ரூபாய் பணத்தைப் பெற்றுக் கொண்டால் $r$ இனது பெறுமானமாக அமையக்கூடியது.
 (1) 10%  (2) 12%  (3) 15%

(v) $n$ என்பது ஒரு நேர் முழு எண்ணாக உள்ளபோது $\frac{(n+1)!}{(n-1)!} - n^2$ இன் பெறுமானமாக அமைவது.
 (1) $n$  (2) 1  (3) $2n$

(vi) பொருளொன்றை விற்பனை செய்யும் போது அதன் குறித்த விலையில் 10% கழிவு வழங்கப்படுகிறது. விற்பனை விலை 810 ரூபாவாக அமையும் போது பொருளின் குறித்த விலை ரூபாய்களில்,
 (1) 729  (2) 891  (3) 900

(vii) சர்வசமனான 5 சிவப்பு பந்துகளும் 4 வெள்ளைப் பந்துகளும் 6 நீலப் பந்துகளையும் கொண்ட பையொன்றில் இருந்து எழுமாறாக தெரிவு செய்யப்படும் 2 பந்துகள் வெள்ளை மற்றும் நீல நிறப்பந்துகளாக இருப்பதற்கான நிகழ்தகவாக அமைவது
 (1) $4/35$  (2) $6/35$  (3) $8/35$

(viii) 2 , 5 , 8 , 11 , ...... என்ற விருத்தியின் 90 ஆவது உறுப்பின் பெறுமானமாக அமைவது
 (1) 536  (2) 272  (3) 269

## பகுதி (ஆ)

**2.** நிறுவனமொன்றினது வருமானம் மற்றும் செலவுச் சார்புகள் முறையே $R = -x^2 + 800x$ மற்றும் $C = 150x + 30\,000$ என்பதனால் தரப்படுகின்றது. இங்கு $x$ என்பது உற்பத்தி செய்யப்பட்டு விற்பனை செய்யப்படும் அலகுகளின் எண்ணிக்கையாகும். வருமானச் சார்பு மற்றும் செலவுச் சார்பின் மாதிரி வரைபுகளை ஒரே ஆள்கூற்றுத் தளத்திலேயே வரைக.

உமது வரைபுகளைப் பயன்படுத்தி பின்வருவனவற்றைக் கணிக்குக.

(i) வருமானமானது செலவுக்குச் சமனாகும் புள்ளிகள்
(ii) உச்ச இலாபத்தைப் பெற்றுக்கொள்ளும் சந்தர்ப்பத்திலே விற்பனை அலகுகளின் எண்ணிக்கை
(iii) நிறுவனத்திற்குப் பெற்றுக் கொள்ளக்கூடிய உச்ச இலாபம்
ஆகியவற்றைக் கணிக்குக.

**3.** (i) இரு பெண்களையும் மூன்று ஆண்களையும் ஒரே வரிசையில் வைக்கப்பட்டுள்ள ஐந்து ஆசனங்களில் அமர்த்துவதற்கு தேவையேற்பட்டது. இரு பெண்களும் அருகருகில் உள்ள ஆசனங்களில் அமரவில்லை எனின் அவர்களுக்கு இருக்கக்கூடிய ஒன்றிற்கொன்று வேறுபட்ட எத்தனை முறைகள் உள்ளன?

(ii) வருடாந்த வட்டிவீதம் 8% வீதமாக காலாண்டுகளுக்கு வட்டி கூட்டப்படுமாறு எந்தவொரு பணமும் அதன் இருமடங்காவதற்காக எடுக்கும் காலம் எவ்வளவாகும்?

**4.** (i) பெருக்கல் விருத்தியொன்றின் முதல் மூன்று உறுப்புகளின் பெருக்கம் 512 உம் அதன் ஐந்தாவது உறுப்பு 64 உம் ஆகும். இந்தப் பெருக்கல் விருத்தியின் முதலாம் உறுப்பு மற்றும் பொது விகிதத்தைக் காண்க.

(ii) அருகில் உள்ள பாடசாலையொன்றின் 10% மான மாணவர்கள் பட்மின்ரன் விளையாடுவதாகவும் 5% மான மாணவர்கள் கிரிக்கட் விளையாடுவதாகவும் விளையாட்டுப் பொருட்களின் களஞ்சியசாலை முகாமையாளர் ஒருவர் மதிப்பிட்டிருந்தார். மேலும் பட்மின்ரன் விளையாடும் மாணவர்களில் 40% மானோர் கிரிக்கட் விளையாட்டிலும் ஈடுபடுகின்றனர்.

(அ) பட்மின்ரன் மற்றும் கிரிக்கட் போன்ற **இரு** விளையாட்டிலும் ஈடுபடும் மாணவர்களின் சதவீதம் எவ்வளவு?
(ஆ) இந்த இரு விளையாட்டுக்களிலும் ஒரு விளையாட்டையேனும் **விளையாடாத** மாணவர்களின் சதவீதம் எவ்வளவு?
(இ) தெரிவு செய்யப்பட்ட மாணவனொருவன் கிரிக்கட் விளையாட்டில் ஈடுபடுவதாக அறியப்பட்டால் அந்த மாணவன் பட்மின்ரன் விளையாட்டிலும் விளையாடுபவராக இருப்பதற்குரிய நிகழ்தகவு என்ன?

## பகுதி (இ)

**5.** (i) மையநாட்ட அளவைகளின் (central tendency) முக்கியத்துவத்தை விளக்கி அவ்வகையான அளவைகள் **மூன்றைப்** பெயரிடுக.

(ii) குறித்தவொரு பல்கலைக்கழகமொன்றில் 100 மாணவர்களின் திணிவு கீழேயுள்ள அட்டவணையில் காட்டப்பட்டுள்ளன.

| திணிவு (கிலோகிராம்) | மாணவர்களின் எண்ணிக்கை |
|---|---|
| 60 - 62 | 05 |
| 63 - 65 | 18 |
| 66 - 68 | 42 |
| 69 - 71 | 27 |
| 72 - 74 | 08 |
| **மொத்தம்** | 100 |

(அ) இதன் ஆகார வகுப்பு யாது?
(ஆ) திணிவினது இடையையும் மாறற்திறனையும் காண்க.
(இ) 68 கிலோகிராமை விடக்கூடிய திணிவைக் கொண்ட மாணவர்களின் சதவீதத்தைக் காண்க.

**6.** (i) காலத் தொடரில் அடங்கியுள்ள **நான்கு** கூறுகளைப் பெயரிடுக.
(ii) போக்கினை (Trend) மதிப்பிடுவதற்காக பரவலாக பயன்படுத்தப்படும் **இரு** முறைகளைப் பெயரிடுக.
(iii) உள்ளூர் மோட்டார் வாகன விற்பனையாளர் ஒருவர் வருடமொன்றிலே விற்பனை செய்யும் மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை கீழேயுள்ள அட்டவணையின் தரவுகள் மூலம் காட்டப்பட்டுள்ளன.

| வருடம் | 2001 | 2002 | 2003 | 2004 | 2005 | 2006 | 2007 |
|---|---|---|---|---|---|---|---|
| மோட்டார் வாகனங்களின் எண்ணிக்கை | 1010 | 1125 | 1170 | 1275 | 1394 | 1520 | 1580 |

இழிவு வர்க்க முறையைப் (Least Square Method) பயன்படுத்தி போக்குக்கோட்டின் சமன்பாட்டைக் காண்க.

**7.** குறித்தவொரு பிரதேசமொன்றிலே வசிக்கும் மனிதர்கள் கிழமையொன்றிற்கு தொலைக்காட்சியைப் பார்வையிடும் சராசரி நேரத்தைக் கணிப்பதற்காக 50 மனிதர்களைக் கொண்ட எளிய எழுமாற்று மாதிரியொன்று தெரிவு செய்யப்படும். குடித்தொகையின் நியமவிலகல் 3.8 மணித்தியாலங்கள் எனின்

(i) மாதிரி இடையினது நியம வழுவைக் காண்க.
(ii) மாதிரி இடையின் தொலைக்காட்சி பார்வையிடும் நேரம் 15 மணித்தியாலங்கள் எனின் குடித்தொகை இடைக்கான 95% நம்பிக்கை மட்ட ஆயிடையை கட்டியெழுப்புக.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்/ Department of Examinations, Sri Lanka

**கணக்காய்வு பரீட்சகர் சேவையின் கணக்காய்வு பரீட்சகர் தரம் II இற்கு ஆட்சேர்ப்பதற்கான திறந்த போட்டிப் பரீட்சை - 2016**

Open Competitive Examination for Recruitment of Audit Examiners to Grade II of the Audit Examiners' Service - 2016

**(05) சுற்றாடல்**
Environment

மூன்று மணித்தியாலங்கள்
Three hours

ஒரு பகுதியிலிருந்து **இரண்டு** வினாக்கள் வீதம் தெரிவு செய்து **ஆறு** வினாக்களுக்கு விடை எழுதுக.

## பகுதி I - பொருளியல்

**1.** (i) நிதிப் பண்டங்கள் அல்லது பொருளாதாரப் பண்டங்களின் சிறப்பியல்புகள் **ஐந்து** தருக. *(05 புள்ளிகள்)*

(ii) 'நுண்பாகப் பொருளியல்', 'பேரினப் பொருளியல்' ஆகியன என்றால் என்னவென்பதை வெவ்வேறாக விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) முதலாளித்துவப் பொருளாதார முறைமையின் பிரதான இயல்புகள் எவையென விளக்குக. *(10 புள்ளிகள்)*

**2.** (i) 'நேரடிக் கேள்வி', 'வழிவந்த கேள்வி' ஆகியவற்றை வெவ்வேறாக விளக்குக. *(05 புள்ளிகள்)*

(ii) நிரம்பல் அதிகரித்தல் மற்றும் அதற்குச் சமமான அளவில் கேள்வி குறைதல் ஆகியன பின்வரும் வரிப்படங்கள் மூலம் விளக்கப்படுகிறது.




இதற்கமைய சந்தையில் நிகழத்தக்க மாற்றங்களை வரிப்படம் மூலம் விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) 'தனியுரிமைப் போட்டி', 'நிறைபோட்டி' ஆகியனவற்றுக்கிடையிலான ஒற்றுமை மற்றும் வேற்றுமைகளைக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

**3.** (i) 'மொத்த உள்நாட்டு உற்பத்தி', 'மொத்த தேசிய உற்பத்தி' ஆகியவற்றை வெவ்வேறாக வரையறுக்க. *(05 புள்ளிகள்)*

(ii) தேசிய வருமானத்தைக் கணிப்பதனால் கிடைக்கும் பயன்கள் எவையெனக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

(iii) 'நுகர்வோர் மிகை', 'உற்பத்தி மிகை' ஆகியவற்றை உரிய வரிப்படத்தின் துணையுடன் விளக்குக. *(10 புள்ளிகள்)*

**4.** (i) 'பணத்தின் சந்தர்ப்பச் (அமைய) செலவு' என்றால் என்னவென்பதைச் சுருக்கமாக குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

(ii) மத்திய வங்கியை, வங்கிகளின் வங்கியாளரெனவும் அரசின் வங்கி எனவும் குறிப்பிடுவதற்கான காரணத்தை விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) 'கறுப்புப் பணத்தை சலவை செய்தல் (Money Laundering)' என்றால் என்னவென அறிமுகஞ் செய்து, இதன்மூலம் ஏற்படத்தக்க பொருளாதார ரீதியான விளைவுகள் எவையென விவரிக்குக. *(10 புள்ளிகள்)*

[பக் 2 ஐப் பார்க்க.

## பகுதி II - பொது வணிக அறிவு

**5.** (i) விடயங்களுக்கு அமைய கோப்புக்களை வகைப்படுத்திக் காட்டுக. *(05 புள்ளிகள்)*

(ii) திறந்த அலுவலகத் தளத்திட்டம் (Open Office Layout) மூலமாக அலுவலகமொன்றுக்குக் கிடைக்கத்தக்க அனுகூலங்கள் எவையெனக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

(iii) கோப்புக் குறிப்பொன்றில் உள்ளடங்க வேண்டிய அடிப்படை விடயங்கள் எவையென விளக்குக. *(10 புள்ளிகள்)*

**6.** (i) வார்நாமம் (Bill of Lading) ஏற்றுமதியாளருக்கு முக்கியமாக அமையக் காரணமான விடயங்கள் **ஐந்தைக்** குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

(ii) மீள் ஏற்றுமதி வர்த்தகம் (Re-exporting), இலங்கைக்கு முக்கியமாக அமைவதற்கான காரணங்களைக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

(iii) சர்வதேச வர்த்தகத்தினால் இந்நாட்டுக்கு ஏற்படக்கூடிய **பிரதிகூலமான** நிலைமைகள் எவையெனக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

**7.** (i) ஜீஎஸ்பீ பிளஸ் (GSP+) முறை மூலமாக இலங்கைக்குக் கிடைக்கத்தக்க அனுகூலங்கள் **ஐந்தைக்** குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

(ii) இறக்குமதியின் போதான நடைமுறைகளை ஒழுங்குமுறையில் விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) நாட்டின் பொருளாதார அபிவிருத்திக்கு காப்புறுதி எவ்வாறு பங்களிப்பு செய்கின்றது என்பதனை உதாரணங்களுடன் விளக்குக. *(10 புள்ளிகள்)*

**8.** (i) காசோலையொன்று மறுக்கப்படும் பல்வேறு வகைகளைக் குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

(ii) கூட்டுறவு இயக்கம், தனியார் துறையைப் போன்று வினைத்திறன் **அடையாமையில்** செல்வாக்கு செலுத்தும் காரணங்களைக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

(iii) பங்குடமை வணிகம், கூட்டுமுயற்சி வணிகம் ஆகியவற்றுக்கிடையிலான வேறுபாடுகளைக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

## பகுதி III - வணிக சட்டங்கள்

**9.** (i) இலங்கையின் சட்டத்துறை வரலாற்றின் பிரதான யுகங்கள் **நான்கைக்** குறிப்பிடுக. *(05 புள்ளிகள்)*

(ii) இலங்கையின் சட்டத்தில் பிரித்தானியாவின் செல்வாக்குப் பற்றிச் சுருக்கமாக விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) சட்டம், சமூகம் ஆகியவற்றுக்கிடையிலான நெருங்கிய தொடர்பை விளக்குக. *(10 புள்ளிகள்)*

**10.** (i) ஒப்பந்தமொன்றை முடிவுறுத்தத்தக்க சந்தர்ப்பங்கள் யாவை? *(05 புள்ளிகள்)*

(ii) ஒப்பந்தமொன்றில் உள்ளடங்கும் நிபந்தனைகள் (Conditions) மற்றும் உத்தரவாதங்கள் (Warranties) என்றால் என்னவென அறிமுகஞ்செய்து அதன் முக்கியத்துவம் பற்றி விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) “தவறெனக் குறிப்பிடல்” என்றால் என்னவென விளக்கி அவ்வாறான நிலைமையின் கீழ் ஏற்பட்ட நட்டங்களை ஈடுசெய்வதற்காக, குற்றமற்ற தரப்பினர் பூர்த்திசெய்ய வேண்டிய நிபந்தனைகள் எவையெனக் குறிப்பிடுக. *(10 புள்ளிகள்)*

**11.** (i) ‘நீதிமன்றம்’ என்பதை வரையறுக்க. *(05 புள்ளிகள்)*

(ii) நீதிமன்றமொன்றின் பணிகள் பற்றி விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) ‘நாடொன்றின் சனநாயகத் தன்மையை அளவிடுவதற்குரிய சிறப்பான குறிகாட்டியாக விளங்குவது நீதிமன்றத்தின் சுயாதீனத் தன்மையாகும்’ இதனை பகுத்தாய்ந்து ஆராய்க. *(10 புள்ளிகள்)*

**12.** (i) தொழில் நியாய சபையினால் வழங்கப்பட்டுள்ள தீர்ப்புக்கு எதிராக, மேன்முறையீடு செய்வதற்கென குறித்த தீர்ப்புக்கு உரியதாக குறிப்பிட்ட பணம் தொழில் நியாய சபைக்கு வைப்பிலிடப்பட வேண்டும். அவ்வாறான தீர்ப்புகள் மற்றும் அதற்கு வைப்பிலிடப்பட வேண்டிய பணத்தின் அளவுகள் கொண்ட சந்தர்ப்பங்கள் **மூன்றைத்** தருக. *(05 புள்ளிகள்)*

(ii) தொழில் நியாய சபைக்கு சமர்ப்பிக்கப்பட்ட விண்ணப்பமொன்றை விசாரித்தலை ஒத்திப்போடுதல் அல்லது இடைநிறுத்துதலை மேற்கொள்ளத்தக்கவை எவையென விளக்குக. *(10 புள்ளிகள்)*

(iii) கைத்தொழிற் பிணக்கொன்று ஏற்படும்போது தொழிலாளரினால் செய்யப்பட வேண்டியவை எவையென விளக்குக. *(10 புள்ளிகள்)*

***